Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**உழைப்பு**

உழைப்பே செல்வம். உழைப்பாளர்க்கே உரிமையெல்லாம் உண்டு. உழைப்பாளிக்கே உலகம் உரியது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**வழிபாடு**

ஒழுக்கமாய் நடப்பது, உயர்ந்த பண்புகள் கொள்வது. இதுவே உண்மையான கடவுள் வழிபாடு.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 3-1-83 திங்கள் வெளியூர் 4-1-83 செவ்வாய் இதழ்: 77

கருணாநிதியின் சர்வாதிகாரம்

## தி. மு. க. விலிருந்து பொறுப்பாளர்கள் விலகினார்கள்

**சென்னை, ஜன. 3- கருணாநிதியின் சர்வாதிகாரத்தைக் கண்டித்து தி.மு. க வில் பொறுப்பிலிருக்கும் மூவர் அந்தக் கட்சியிலிருந்து விலகிவிட்டனர்.**

சென்னை மாவட்ட திமுக தேர்தலில் கருணாநிதியும், அவரது குடும்பத்தினரும் சர்வாதிகாரமாக நடந்து கொண்டதை கண்டித்து சென்னையில் சாரி சாரியாக திமு.க.வினர் விலகி வருவது தெரிந்ததே.

சென்னை மாவட்ட பொதுத் தொழிலாளர் முன்னேற்ற சங்கத் தலைவரும், மாவட்ட பிரதிநிதியுமான கே. சுப்பிரமணி தி. மு. க. விலிருந்து விலகி விட்டதாக அறிவித்திருக்கிறார்.

அத்துடன் தி.மு.கவின் தொழிலாளர் முன்னேற்ற சங்கப் பேரவையிலிருந்து, சென்னை மாவட்ட பொது தொழிலாளர் சங்கம் விலகிக் கொள்வதாகவும் சுப்பிரமணி அறிவித்திருக்கிறார்

58-வது வட்ட தி.மு.க. துணைச் செயலாளர் மு. அருணாசலமும் தி.மு.க.விலிருந்து விலகிவிட்டதாக அறிவித்துள்ளார்.

மாவட்ட தி. மு. க. தேர்தலில் கருணாநிதி குடும்பத்தினர் நடந்து கொண்ட விதத்தைக் கண்டிப்பதாக அவர் தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

101-வது வட்ட தி. மு. க. செயற்குழு உறுப்பினர் டி. எம், தட்சிணாமூர்த்தியும், தி. மு. க. விலிருந்து விலகி விட்டதாக அறிவித்திருக்கிறார்.

உண்மையான தி. மு. க. தொண்டர்களைத் தேர்தலில் தோற்கடித்ததுமல்லாமல், அவர்களை இழிவுப் படுத்தி கருணாநிதி எழுதியும், பேசியும் வருவதற்கு தட்சிணாமூர்த்தி கண்டனம் தெரிவித்திருக்கிறார்.

திரிபுரா - கர்நாடகா ஆந்திராவில்

## சட்டசபை தேர்தல்: பிரச்சாரம் ஓய்ந்தது

ஐதராபாத், ஜன. 3 - திரிபுரா, கர்நாடகா, மற்றும் ஆந்திர மாநில சட்டசபை தேர்தலுக்கான தேர்தல் பிரச்சாரம் இன்று மாலை 4 மணியுடன் முடிவடைந்தது.

ஆந்திராவில் இன்று பிரதமர் இந்திராவும், தெலுங்கு தேசக் கட்சித் தலைவர் ராமாராவும் இறுதிக்கட்ட மின்னல் வேகப்பிரச்சாரத்தில் ஈடுபட்டனர்.

கர்நாடக மாநிலத்தில் இந்திரா காங்கிரஸ் தலைவர்களும் எதிர்க்கட்சித் தலைவர்களும் இன்று ஏராளமான கூட்டங்களில் பங்கேற்று பேசினார்கள்.

திரிபுராவில் மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்கள் தீவிர தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டனர்.

இந்த 3 மாநிலங்களிலும் (3-ந் தேதி) மாலை 4 மணியுடன் பிரச்சாரம் முடிந்தது.

### கோலார் கழக கூட்டச் சிறப்பு

2-ம் பக்கம்

பல லட்சம் குழந்தைகள் பட்டினி கிடக்க விடமாட்டோம்

# சத்துணவுத் திட்டத்தை கைவிடமாட்டோம்

## 'பிச்சை எடுத்தாவது நிறைவேற்றுவோம்' புரட்சித்தலைவர் உணர்ச்சி முழக்கம்



**பெங்களூர், ஜன. 3-லட்சோப லட்சம் குழந்தைகள் பட்டினி கிடக்க விட மாட்டோம். எந்த நிலையிலும் சத்துணவுத் திட்டத்தைக் கைவிட மாட்டோம். சத்துணவுத் திட்டத்தை நிறைவேற்ற பிச்சை எடுக்கவும் தயார் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

கர்நாடக மாநிலத்தில் தங்கவயல் தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் பக்தவத்சலத்தை ஆதரித்து ராபர்ட்சன் பேட்டை பொதுக்கூட்டத்தில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

இந்தப் பகுதியில் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகவேட்பாளராக பக்தவத்சலம் போட்டியிடுகிறார். அவர் இரட்டை இலை சின்னத்தில் போட்டியிடுகிறார்.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் இங்கு மட்டும்தான் இரட்டை இலை சின்னத்தில் போட்டியிடுகிறது. வேறு தொகுதியில் பல இடங்களில் இரட்டை இலைச் சின்னத்தில் பலர் போட்டியிட்டாலும் அவர்கள் கழக வேட்பாளர்கள் அல்ல. இங்கே தங்கவயல் தொகுதியில் போட்டியிடும் தம்பி பக்தவத்சலம்தான் கழக வேட்பாளர்.

வேறு சில இடங்களில் போட்டியிடும் சிலர் எம். ஜி. ஆர். ஆதரவு பெற்ற வேட்பாளர் என்று சொல்கிறார்களாம். அது உண்மையல்ல.

இ. காங்கிரசார் நம்முடைய ஆதரவை கேட்டார்கள். சில இடங்களில் வாபஸ் பெற்றுக் கொண்டு ஆதரவு அளித்து இருக்கிறோம்.

### தமிழக மக்களின் பிரச்சினை

அந்தக் கட்சியை ஆதரிக்கலாமா எனக் கேட்கலாம். அவர்களை ஆதரிக்காவிட்டால் தமிழகத்திற்கு தண்ணீர் வருமா? இ. காங்கிரசை ஆதரித்து அவர்கள் ஆட்சிக்கு வந்தால் தான் சமரசப் பேச்சு நடத்தி தண்ணீர் பெறமுடியும்.

இது நாலே முக்கால் கோடி தமிழக மக்களின் பிரச்சினை. தமிழகம் உயரவேண்டும். அப்படிச் செய்தால்தான் நான் அண்ணாவின் தம்பி என நிருபிக்க முடியும். நாலே முக்கால் கோடி தமிழக மக்கள் என்னை நம்பி ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்திருக்கிறார்கள்.

தமிழகத்தில் 70 லட்சம் குழந்தைகளுக்கு சத்துணவு அளித்து வருகிறோம். இதுவரை எந்த ஆட்சியாவது சத்துணவு கொடுக்க முயன்றிருக்கிறதா?

நான் என்னுடைய மூன்று, மூன்றரை வயதில் பட்டினி கிடந்தவன். அப்போது பக்கத்துவீட்டு தாய் அரிசி கொடுத்து என் தாய் கஞ்சி காய்ச்சி கொடுத்திருக்காவிட்டால் இன்று உயிரோடு இருந்திருக்க முடியாது. நான் பசிக் கொடுமையை உணர்ந்தவன். அந்தக் கொடுமை குழந்தைகளுக்கு வந்து விடக் கூடாது என்பதால் இன்று சத்துணவு அளித்து வருகிறோம். நான் முதலமைச்சராக இருக்கும் வரை பிச்சை எடுத்தாவது குழந்தைகளுக்கு உணவளிப்போம்.

எந்த நிலையிலும் இலவச மதிய சத்துணவு திட்டத்தை கைவிடமாட்டோம்.

தமிழகத்தில் தண்ணீர் இல்லை. மின்சாரம் இல்லை. எப்படி இந்தத் திட்டத்தைநிறைவேற்றப் போகிறீர்கள் என்றுசிலர் கேட்கிறார்கள். மக்களுடைய பிரச்சினை எதையும் நிறைவேற்றியே தீருவோம்.

கோகாக் கமிட்டி கோரிக்கைக்காக போராட்டத்தில் இறந்த 4 பேர்களின் குடும்பத்திற்கு தலா 20 ஆயிரம் ரூபாய் அளித்திருக்கிறோம். இது தமிழக மக்கள் தந்த பணமாக கருதவேண்டும்.

நாங்கள் 20 ஆயிரம் ரூபாய் தந்தோம். இங்கே ஒரு எம். எல். ஏ. இருக்கிறாரே ('ஆறுமுகம், ஆறுமுகம்' என மக்கள் கூச்சல்) அவருக்கு இந்த உணர்வு இருந்ததா?

நான் பிரச்சாரத்திற்கு

(2-ம் பக்கம் பார்க்க)

முதல்வர் புரட்சித்தலைவர் கருத்து

## கர்நாடக தேர்தல் முடிந்ததும் காவிரிநீர் பிரச்சினைக்குத் தீர்வு

**பெங்களூர், ஜன 3- கர்நாடக மாநிலத் தேர்தல் முடிந்ததும் காவிரிப் பிரச்னைக்குத் தீர்வு காண்போம் என்று குண்டுராவ் தொகுதியில் பிரச்சாரம் செய்கையில் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

கர்நாடக சட்டசபை தேர்தலில் முதலமைச்சர் குண்டுராவ் சோமவார் பேட்டை தொகுதியில் போட்டியிடுவது தெரிந்ததே.

அவரை ஆதரித்து தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் இன்று காலை சோமவார் பேட்டையில் பிரசாரம் செய்தார்.

பெங்களூரிலிருந்துசோமவார்பேட்டைக்கு ஹெலிகாப்டர் விமானம் மூலம் முதல்வர் புரட்சித் தலைவர் வந்தார். அவருடன் அமைச்சர் அண்டேயும் வந்தார்.

### தமிழக நலனே பெரிது

சோமவார் பேட்டையில் நடந்த பிரமாண்டமான பொதுக் கூட்டத்தில் கர்நாடக முதல்வரும் தொகுதி வேட்பாளருமான குண்டுராவும் கலந்து கொண்டார்

இந்தக் கூட்டத்தில் முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

நான் இங்கு பிரச்சாரம் செய்யவரும்போது, இ. காங்கிரசுக்கு உங்கள் ஆதரவா என்ற சிலர் கேட்டனர்.

எங்களுடைய லட்சியமெல்லாம் தமிழ்நாடு நன்றாக இருக்கவேண்டும். இந்தியா நன்றாக இருக்கவேண்டும். எல்லோருமே நன்றாக இருக்க வேண்டும் என்பது தான். நடைபெற இருக்கும் தேர்தலில் நீங்கள் குண்டுராவுக்கு ஓட்டு போடுங்கள். இந்த தேர்தல் முடிந்ததும் காவிரி நீர்ப் பிரச்னையைப் பேசித் தீர்த்துக் கொள்ளலாம். தண்ணீரை நல்லபடியாகப் பகிர்ந்து கொள்ளலாம். பற்றாக்குறையாக இருக்கும் மின்சாரத்தையும் பெற்றுக்கொள்ளலாம்.

இவ்வாறு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர்கூறினார்.

## நாஞ்சில் கிறுக்கனே நாவை அடக்கு!

உதவாக்கரை என்று கருதி தி. மு. க. காரனாலேயே அரசியலில் ஓரம் கட்டப்பட்டுக் கிடந்த நாஞ்சில் கிறுக்கன் மீண்டும் தன் நாத் தடிப்பைக் காட்டியிருக்கிறார்.

அரசியல் பூர்வமாக எதையும் கூறாமல் அறிவிலித்தனமாக உளறியிருக்கிறார்.

நடைபெற இருக்கிற ஆந்திர — கர்நாடக மாநில சட்டமன்ற தேர்தலில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் நிலையைச் சாடியிருக்கிறார் இந்தச் சழக்கன்.

கர்நாடகாவுக்கு ஒரு நிலையா? ஆந்திராவுக்கு ஒரு நிலையா என்று நம்மைப் பார்த்துக் கேட்கிறார்.

நடக்க இருக்கும் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி மு கழகம் எங்களைஆதரிக்க வேண்டும் என்று கர்நாடக மாநில இ. காங்கிரஸ் பொதுச செயலாளா ராஜகோபால் கடிதம் எழுதினார்.

அதைத் தொடர்ந்து அங்கு கழகம் போட்டியிடும் கோலார் தங்கவயல் தொகுதி தவிர மற்ற தொகுதிகளில் இ. காங்கிரசை ஆதரிப்பது என கழகம் முடிவெடுத்தது.

ஆந்திர மாநில இ. காங்கிரஸ் சார்பில் கழகத்திடம் யாரும ஆதரவு கேட்கவில்லை.

எனவே, அந்த மாநில நிலைமையைப் பொறுத்து முடிவெடுக்கும் பொறுப்பை அந்த மாநிலக் கழகத்திடமே விடப்பட்டது.

இதைக் கழகப் பொதுச்செயலாளர் ப, உ, ச. தெளிவாகவே அறிவித்திருக்கிறார்.

பத்திரிகை படிக்கும் பழக்கத்தைப் பரணையில் தூக்கிப் போட்டுவிட்டு பைத்தியக்காரத் தனமாக நம்மைச்சாடுகிறார் அரசியல் பரதேசி மனோகரன்.

'அங்கே ஒரு நிலை, இங்கே ஒரு நிலையா அய்யோ இது அடுக்குமா?' என்று குய்யோ முறையோ எனக் கூப்பாடுபோடும் இந்தக் கூறு கெட்ட மனிதனின் கட்சி நிலை என்ன?

ஆந்திரத்திலும், கர்நாடகத்திலும் ஒரே நிலையைத்தான் தி. மு. க. எடுத்திருக்கிறதா?

மதிகெட்டுப் புலம்பும் மனோகரன் பதில் சொல்ல முடியுமா?

ஆந்திர மாநிலத்தில் இ காங்கிரசை தி மு க. ஆதரிக்கிறது ஆனால் கர்நாடக மாநிலத்தில் இ. காங்கிரசை தி மு.க. ஆதரிக்கவில்லை.

அது மட்டுமல்ல இ காங்கிரஸ் போட்டியிடும் பாரதிநகர் தொகுதியில் தி. மு. க. தனது வேட்பாளரை நிறுத்தியிருக்கிறது.

இதுதான் நிலைமை.

**புலிகேசி**

மக்கு மனோகரனின் மகா பெரிய தலைவர் கருணாநிதி என்ன சொல்கிறார்?

"ஆந்திர இ. காங்கிரஸ் அமைச்சர் ஜனார்த்தன ரெட்டி தி. மு. க. ஆதரவு கேட்டுக் கடிதம் எழுதினார். அதனால் அங்கு ஆதரிக்கிறோம். கர்நாடக இ. காங்கிரசார் ஆதரவு கேட்கவில்லை; ஆகவே இங்கு ஆதரிக்கவில்லை" — என்கிறார் கருணாநிதி.

இந்த நிலைக்கு என்ன பெயர் என்று கருணாநிதி வீட்டுக் காவலாளி மனோகரன் சொல்வாரா?

ஒரு பிரச்சினையில் தனது கட்சியின் நிலை என்னவென்று தெரியாமலே தான்தோன்றித்தனமாக கருத்துக் கூறுகிறவர் அந்தக் கட்சியின் துணைப்பொதுச் செயலாளராம் - வெட்கக்கேடு.

மன்னிக்கவும் துணைப் பொதுச் செயலாளராக இவா செயல்பட்டால் அல்லவா இவருக்கு விவரம் தெரிய? இவர்தான் 'துணி' பொதுச் செயலாளராயிற்றே!

★ உயரமான மாடிமீது அலங்கார மேடை

★ தொழிலாளர், தாய்மார்கள், பல மொழிக்காரர்கள் திரண்டுவந்த மாட்சி

# 2 லட்சம் மக்கள் மத்தியில் புரட்சித்தலைவர் முழக்கம்

## தங்கவயல் தொகுதியில் கழகத்துக்கு பிரகாசமான வெற்றி வாய்ப்பு

கோலார், ஜன. 3- கர்நாடக மாநிலம் கோலார் தங்கவயல் தொகுதியில் ராபர்ட்சன் பேட்டையில் இரண்டு லட்சம் மக்கள் திரண்டிருந்த பிரும்மாண்டமான தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் கழக வேட்பாளர் பக்தவத்சலத்தை ஆதரித்து முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று இரவு பேசினார்.

மைதானத்தை ஒட்டி இருந்த மாடி வீட்டின் மேல் அலங்கார மேடை அமைக்கப்பட்டு இருந்தது. அந்த மாடி மேடை மீது இருந்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

கர்நாடக சட்டசபைக்கு இம் மாதம் 5-ந் தேதி வாக்குப்பதிவு நடைபெறுகிறது.

கோலார் தங்க வயல் தொகுதியில் கழக வேட்பாளர் பக்தவத்சலம் போட்டியிடுகிறார்.

"புரட்சித் தலைவரது வெற்றிச் சின்னமான இரட்டை இலையில் பக்தவத்சலம் போட்டியிடுகிறார்.

பக்தவத்சலத்தை ஆதரித்து பிரச்சாரம் செய்ய முதல்வர் புரட்சித் தலைவர் கோலார் தங்க வயலுக்கு நேற்று வந்தார்.

சென்னையில் இருந்து தங்கவயல் தொகுதிக்கு முதல்வர் புரட்சித் தலைவர் வருகை தந்த போது வழியெங்கும் மக்கள் திரண்டிருந்து வரவேற்றனர்.

### உற்சாக வரவேற்பு

தமிழகத்தில் இருந்து கர்நாடக எல்லை வந்த போது முதல்வர் புரட்சித் தலைவருக்கு கர்நாடக மக்கள் சார்பிலும் கழகத்தின் சார்பிலும் உற்சாக வரவேற்பு தரப்பட்டது. எழுச்சியுடன் இருந்த வரவேற்பில் கழகத் தோழர்கள் உணர்ச்சி முழக்கமிட்டு புரட்சித்தலைவரை வரவேற்றனர்.

மூடிய காரில் முதல்வர் புரட்சித்தலைவர் சென்று கொண்டு இருந்த போது ஆர்வம் கொண்டு காத்து இருந்த மக்களைக் கண்டார்.

முதல்வர் புரட்சித் தலைவர் அந்தமக்களைக் கண்டதும் காரில் இருந்து இறங்கியவுடன் புரட்சித் தலைவர் வாழ்க என்ற கோஷம் மண்ணிலிருந்து புறப்பட்டு விண்ணை முட்டி மோதியது.

வழி எங்கும் தாய்க் குலத்தினர் தொழிலாளர் பல்வேறு மொழிக்காரர்கள் திரண்டு நிற்கவே திறந்த ஜீப்பில் ஊர்வலமாக சென்றார்.

### மக்கள் வெள்ளம்

மக்கள் கர ஒலி எழுப்பி வரவேற்றனர், வழி எங்கும் முழக்கம் அலை அலையாக எழுந்த வண்ணம் இருந்தது.

கர்நாடக போலீஸ்உயர் அதிகாரிகளும் போலீசாரும் கூட்டத்தை ஒழுங்குபடுத்த பெரு முயற்சி எடுத்தனர்.

கட்டுகடங்காத கூட்டம் அணையிலிருந்து வெளிப்பட்டுவரும் பெரு வெள்ளம்போல உற்சாகமேலீட்டால் குழுமி நின்றனர்.

இந்த மக்கள் வெள்ளத்தைக் கட்டுப்படுத்த கர்நாடக போலீசார் திணறிப்போனார்கள் என்றே சொல்லவேண்டும்.

கோலார் தங்கவயல் தொகுதியில் கழக வேட்பாளர் பக்தவத்சலத்தை ஆதரித்து ராபர்ட்சன் பேட்டை முனிசிபல் மைதானத்தில் மாபெரும் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் நடந்தது.

தங்கவயல் தொழிலாளர்கள் - பல்வேறு மொழிக்காரர்கள் அந்தக் கூட்டத்தில் திரண்டு இருந்தனர். தாய்க்குலத்தினர் குழந்தைகளுடன் பெருந்திரளாக வந்திருந்தனர்.

### 2 லட்சம் மக்கள்

முதல்வர் புரட்சித் தலைவர் பேசவந்தபோது மைதானத்தில் திரண்டு இருந்த சுமார் 2 லட்சம் மக்கள் நெருக்கியடித்து அமர்ந்து இருந்தனர்.

மைதானத்திற்கு வெளியேயும் மக்கள் இருந்தனர்.

மைதானத்தை ஒட்டி இருந்த ஒரு வீட்டின் மாடியில் அலங்கார மேடை அமைக்கப்பட்டு இருந்தது.

உயரமாக இருந்த மாடி மேடைக்கு புரட்சித் தலைவர் வந்ததும் மக்கள் எழுப்பிய முழக்கம் எட்டுத் திக்குகளிலும் எதிரொலியை உண்டாக்கியது.

அந்த மேடையில் இருந்து முதல்வர் புரட்சித்தலைவர் கழக வேட்பாளர் பக்தவத்சலத்தை ஆதரித்து முழக்கமிட்டார்.

கழக வேட்பாளரை ஆதரிக்குமாறு அவர் ஆற்றிய உரை மக்களது நெஞ்சங்களை தொடும் வகையில் உணர்ச்சிபூர்வமாக இருந்தது.

"தாய்மார்களும் பல்வேறு மொழிக்காரர்களும் இங்கே திரளாக குழுமி இருக்கிறீர்கள். உங்களைப் பார்க்கும் போது தெய்வங்களைப் பார்ப்பது போல இருக்கிறது.

### வெற்றி விழா

இங்கே போட்டியிடும் எங்கள் கழக வேட்பாளர் பக்தனை உங்களிடம் ஒப்படைத்துச் செல்கிறேன். அந்த பக்தனை வெற்றிபெற வையுங்கள்.

10-ம் தேதி வெற்றி விழாவுக்கு வந்துமீண்டும் உங்களைச் சந்திக்கிறேன் என்று முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்த வேண்டுகோளை அந்த வாக்காளப் பெருமக்கள் ஏற்று நீண்ட நேரம் கைதட்டினர்.

அவர்கள் எழுப்பிய கர ஒலி பக்தவத்சலத்தின் வெற்றி வாய்ப்பை உறுதிப்படுத்துவதாகவே இருந்தது.

### எங்கும் 'இரட்டை இலை' தோரணங்கள்

ராபர்ட்சன் பேட்டை கூட்டத்திற்கு வந்திருந்த பெண்கள் பலரும் இரட்டை இலைச்சின்னம் தரித்து வந்தனர். கையில் இரட்டை இலை ஏந்தி வந்தனர். கழகக் கொடிகளை ஏந்தி காளையர் வந்திருந்தனர்.

எங்கும் இரட்டை இலையும், கழகக் கொடியும் அளித்தகாட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

ராபர்ட்சன்பேட்டை கூட்டத்திற்கு முனியப்பா தலைமை வகித்தார்.

அமைச்சர்கள் அண்டே, முத்துசாமி, கழக எம்.எல்.ஏ.க்கள் டாக்டர் சமரசம், அன்பழகன், ஜி. விசுவநாதன், சேதுராமன், பாலகிருஷ்ணன், ரங்கசாமி மற்றும் பலர் பேசினார்கள்.

### சத்துணவு நிதி குவிந்தது

கூட்டத்தில் சத்துணவு திட்டத்திற்கு ஏராளமானவர் நிதி வழங்கினார்கள்.

சங்கீதா என்ற சிறுமியும் நிதி வழங்கினாள்.

முதல்வர் புரட்சித் தலைவர் கோலார் தங்கவயல் வந்து பிரச்சாரம் செய்த பிறகு தங்கவயல் தொகுதியில் ஒரு புதிய எழுச்சி ஏற்பட்டுள்ளது.

### வெற்றி உறுதி

பக்தவத்சலம் வெற்றி உறுதிப்பட்டு விட்டது என்று மக்கள் மகிழ்ச்சியுடன் தெரிவித்த வண்ணம் உள்ளனர்.

நேற்று கோலாரில் தேர்தல் பிரச்சாரம் செய்துவிட்டு வந்த முதல்வர் புரட்சித் தலைவர் இன்று காலை குடகு பகுதிக்குச் சென்றார்.

குடகு பகுதியில் சோமவார் பேட்டையில் கர்நாடக முதல்வர் குண்டுராவ் போட்டியிடுகிறார்.

### அமைச்சர் அண்டே

குண்டுராவை ஆதரித்துப் பிரச்சாரம் செய்ய முதல்வர் புரட்சித் தலைவர் ஹெலிகாப்டர் மூலம் குடகு சென்றார்.

அவருடன் அமைச்சர் அண்டேயும் சென்றார்.

குண்டுராவை ஆதரித்து பேசிவிட்டு பெங்களூர் திரும்புகிறார்.

பிற்பகல் பாரதிநகரில் போட்டியிடும் இந்திரா காங்கிரஸ் வேட்பாளரை ஆதரித்து முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகிறார்.



அமைச்சர் குழந்தைவேலு முன்பு

### கழகத்தில் இணைந்த தி.மு.க.வினர்

சோளிங்கர், ஜன. 3— வடாற்காடு மாவட்டம் சோளிங்கரில் ஒன்றிய கழக செயலாளர் சுப்பிரமணியம் தலைமையில் கழகக் கூட்டம் நடந்தது.

இக்கூட்டத்தில் அமைச்சர் குழந்தைவேலு பேசினார்.

கூட்டத்தில் அமைச்சர் குழந்தைவேலுமுன்னிலையில் தி.மு.கவில் இருந்து விலகி 50 பேரும், மற்றும் மாற்றுக் கட்சியைச் சேர்ந்த 50 பேரும் கழகத்தில் இணைந்தனர்.

### தந்தை-மகன் தகராறு: மகன் தற்கொலை

சென்னை, ஜன. 3— தந்தைக்கும் மகனுக்கும் தகராறு ஏற்பட மகன் தற்கொலைசெய்து கொண்டார்.

30 வயது சந்திரசேகர் ஒரு முன்னாள் காவலர். மணமாகி இரண்டு குழந்தைகள் உள்ளன.

இவரது தந்தை ஒரு தலைமை காவலர். இருவருக்கும் ஏதோ குடும்பத்தகராறு ஏற்பட்டதாம்.

இதனால் மகன் சந்திரசேகரன் தந்தையின் வேட்டியால் தூக்குப் போட்டு தற்கொலை செய்து கொண்டு விட்டதாக கூறப்படுகிறது.

ஐஸ்ஹவுசில் நடந்த இந்த சம்பவம் பற்றி போலீசார் புலன் விசாரணை நடத்துகிறார்கள்.

மின்வெட்டு

### ஏற்றுமதி தொழிலுக்கு விலக்களிக்க கோரிக்கை

சென்னை, ஜன. 3— ஏற்றுமதி தொழிலுக்கு மின்வெட்டிலிருந்து விலக்களிக்கவேண்டும் என்று இன்ஜினியரிங் ஏற்றுமதி அபிவிருத்திக் கழகத்தின் தலைவர் குமார் மகாதேவன் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

### கேரளத்தில் மின் வெட்டு உயருகிறது

கோட்டயம், ஜன. 3— கேரள மாநிலத்தில் தொழிற்சாலைகளுக்கு இப்போது இருக்கும் மின்வெட்டு மேலும் உயர்கிறது.

இந்தக் கூடுதல் மின்வெட்டு இம்மாத மத்தியில் இருந்து அமலுக்கு வரும் என்று கேரள மின்சார மந்திரி பாலகிருஷ்ணபிள்ளை கூறியுள்ளார்.

### கிணற்றில் மிதந்த கோகிலா

சென்னை, ஜன. 3— சூளை வி. வி. கோயில் தெருவைச் சேர்ந்தவர் கோகிலா வயது-28.

உறவினர் வீடு சென்ற இவர் திடீரென்று காணாமல் போய் விட்டாராம். வீட்டார் தேடினர்.

ஆனால் மறுநாள் இவரது உடல் ஒரு பாழுங்கிணற்றில் கிடந்தது. இவர் தற்கொலை செய்து கொண்டாரா? அல்லது வேறு வகை சாவா என்பது பற்றி போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

---

### எம் ஜி.ஆர். இளைஞர் அணியில் உறுப்பினர்களை பதிவு செய்து கொள்ள வேண்டிய கடைசி தேதி 28-2-83

1972-ம் ஆண்டு புரட்சித்தலைவர் அவர்கள் பொதுச் செயலாளராக பொறுப்பேற்ற பொழுது உறுப்பினர்களாக பதிவு செய்து கொண்டவர்கள் அனைவரும் வருங்கால இளைஞர்களுக்கு, தக்க ஆலோசனை கூறி வழிகாட்டுவதற்காக எம்.ஜி.ஆர் இளைஞர் அணியில் உறுப்பினர்களாக தங்களை பதிவு செய்து கொள்ள வேண்டும்.

எம். ஜி. ஆர். மன்றத்தில் உறுப்பினராக இருக்கின்றவர்கள் அனைவரும், இளைஞர் அணியில் உறுப்பினர்களாக பதிவு செய்து கொள்ள வேண்டும். ஒன்றிய, நகர நிர்வாக பொறுப்புகளுக்கு விண்ணப்பம் செய்துள்ள தோழர்கள், அந்தந்த பகுதியில் உள்ள சிற்றூர்களில் இளைஞர் அணி கிளைகள், எத்தனை இடங்களில் அமைக்கப்பட்டிருக்கிறது என்ற தகவலை, தலைமைக் கழகத்திற்கு தெரிவிக்க வேண்டுகிறேன்.

தங்கள் அன்புள்ள,

பி முசிறிப்புத்தன்

தலைவர்,

எம். ஜி. ஆர். இளைஞர் அணி

---

# சத்துணவு திட்டத்தை கைவிடமாட்டோம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வரும் போது அம்பேத்கார் சிலைக்கு மாலை அணிவிக்கவேண்டும் என நினைத்தேன். ஆனால் சிலை இல்லை. இங்கேசிலை நிறுவுவதற்காக ஏற்பாடு செய்யப் பட்டிருந்ததாம். அந்த சிலை எங்கே போனது? என்ன ஆயிற்று? இதற்கு அவர் பதில் சொல்லவேண்டிய காலம் வந்து விட்டது.

### மக்களே தெய்வம்

பக்தவத்சலம் உங்களின் பக்தன். அவர் என்னை சந்திக்க வந்த போது 'உங்கள் பெயர் என்ன' என்று கேட்டேன். பக்தன் என்றார். யாருக்கு பக்தன் என்றேன். நான் மக்களுக்கு, அண்ணாவுக்கு பக்தன் என்றார்.

என் தம்பி பக்தவத்சலம் தமிழகத்தைத் தாண்டி இங்கே வந்திருந்தாலும் தன்மானத்தோடு பாச உணர்வோடு அனைவரும் மகிழும் வகையில் தொண்டுசெய்யக் கூடியவர்.

தெய்வம் பக்தனை காப்பது போல் தெய்வமாகிய நீங்கள் பக்தவத்சலத்தை வெற்றி பெறச் செய்து விதான்சவுதாவுக்கு அனுப்ப வேண்டும்.

என்னை பொருத்தவரை ஒரு மதத்திற்கு சலுகை, இன்னொரு மதத்திற்கு சலுகை இல்லை என்ற பேச்சே இல்லை.

எனக்கு ஜாதி மதம் பேதம் கிடையாது. எம் மதமும் சம்மதம் என்ற எண்ணம் உடையவன்.

### மந்திரி சபை மாற்றம்

விரைவில் தமிழக மந்திரி சபையை மாற்றி அமைக்க திட்டமிட்டிருக்கிறேன். மந்திரிசபையில் எல்லா வகுப்பினருக்கும் பிரிவினருக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படும்.

இங்கே பல்வேறு தரப்பினரும், பல மாநில மக்களும் வசிக்கிறீர்கள். உங்கள் அனைவரது பிரச்சினைகளையும் வாதாடக் கூடியவர் பக்தவத்சலம்.

தமிழகத்தில் சத்துணவு திட்டம் நல்ல திட்டமாக இருப்பதுபற்றி இங்கேசுட்டிக்காட்டி இங்கேயும் செயல்படுத்த பக்தவத்சலம் வற்புறுத்துவார்.

ஒரே ஒருவர் என்ன செய்வார் என்பதல்ல முக்கியம். சிறு உளி பெரிய மலையை துளைத்து விடும்.

இலவச சத்துணவுத் திட்டத்தால் குழந்தைகள் நல்ல ஊட்டச் சத்து பெற்று - நல்ல கல்வி அறிவு பெற்று - எதிர்காலத்தில் நாட்டை ஆளும் தகுதி பெற்றவர்களாகத் திகழ்வார்கள்.

கர்நாடகத்தில் சத்துணவு திட்டம்கொண்டு வரப்பட வேண்டும் என்கிற உணர்வுக்கு ஓட்டுப் போடுங்கள்.

### அனைத்து மாநிலங்களிலும் கழகம் போட்டி

இரட்டை இலைச் சின்னத்தில்இங்கு மட்டும் தான் இப்போது போட்டியிடுகிறோம். இன்னும் 15 ஆண்டுகளில் இந்தியா முழுவதிலும் எல்லா மாநிலங்களிலும் இரட்டை இலை சின்னம் (கழகம்) போட்டியிடும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

(பலத்த கைதட்டல்)

தமிழகத்தில் கழகம் ஆட்சிக்கு வந்த பிறகு ஏராளமான நல்ல திட்டங்களை நிறைவேற்றி இருக்கிறோம்.

விதவை தாய்மார்களுக்கு—கணவனால் கைவிடப்பட்ட தாய்மார்களுக்கு வேலை வாய்ப்பு தருவதில் முதலிடம் தருகிறோம்.

அவர்களிலும் ஊனமுற்றோர்களுக்கு மேலும் முக்கியத்துவம் தருகிறோம். இப்படிப்பட்ட திட்டம் இந்தியா முழுமையும் வரவேண்டும். சத்துணவு திட்டத்தில் ஆயிரக்கணக்கான தாய்மார்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது.

ஜனவரி 31-ந் தேதிக்குள் மேலும் 3500 தாய்மார்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்கப்பட இருக்கிறது.

தமிழகத்தை பொறுத்த வரை போதிய மழை இல்லை. தண்ணீர் இருந்தால்தான் உணவு உற்பத்தி பெருகும். இங்கே காவிரியில் இருந்து தண்ணீர் வரவேண்டும். இந்த நேரத்தில் நாங்கள் இவர்களை (கர்நாடக அரசை) நெருக்கடிக்கு ஆளாக்க விரும்பவில்லை. எல்லாம் விரைவில் நல்ல படியாக நடக்கும்.

தமிழகத்தில் முதியோர்கள் 2 லட்சம் பேருக்கு மாதம் 35 ரூபாய் உதவிப் பணமும் ஆண்டுக்கு 2 வேஷ்டி, 2 சேலைகளும் அளித்து வருகிறோம். அவர்கள் இந்த 35 ரூபாயை வைத்துக் கொண்டு எப்படிபிழைக்க முடியும் என்பதை யோசித்து அவர்களுக்கு ஒரு வேளையாவது நல்ல உணவு கிடைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் சத்துணவு வழங்க இருக்கிறோம்.

70 லட்சம் குழந்தைகளுக்கு சத்துணவு வழங்குவது போல் 2 லட்சம் முதியோர்களுக்கும் பொங்கல் முதல் இலவச மதிய சத்துணவு வழங்க இருக்கிறோம்.

பல நெருக்கடிக்கு இடையிலேயும் அரிசி இல்லை, தண்ணீர் இல்லை, என்ற நிலையில் நாங்கள் இந்த திட்டத்தை நிறைவேற்றுகிறோம்.

கர்நாடகத்தில் இருப்பவர்கள் ஏன் இதை செய்யக்கூடாது?

பலமொழி பேசும் மக்கள் இங்கே இருக்கிறீர்கள். உங்கள் எல்லோருடைய பிரச்சினையையும் பேச பக்தவத்சலத்தை சட்டசபைக்கு அனுப்புங்கள்.

"எங்களிடம் பணம் இருக்கிறது. எம்.ஜி.ஆர். வந்தால் என்ன? நான் பணம் கொடுத்து ஓட்டு வாங்கி விடுவோம்" என்கிறாராம் எதிரணி வேட்பாளர்.

பணம் இருந்து என்ன செய்வது? நல்ல மனம் வேண்டாமா?

கோடிக் கணக்கான பணம்வைத்திருப்பவர்கள் ஏழைகளுக்கு கஞ்சி காய்ச்சி தரக்கூடாதா?

மொழிப் போரில் இறந்தவர்களின் குடும்பத்திற்கு பணம்தரக்கூடாதா காயமடைந்தவர்கள் இருக்கிறார்களே அவர்களுக்கு பணம் தரக்கூடாதா?

ஓட்டுக்காக பணம் கொடுத்தால் வாங்கிக் கொள்ளுங்கள். அது உங்கள் பணம். இரட்டை இலை சின்னத்திற்கு ஓட்டு போடுங்கள்.

அண்ணாவின் கொள்கைக்காக யார் துன்பத்தை ஏற்றாலும் அந்த துன்பத்தை தணிக்க கழகம் தன்னால் இயன்ற அளவு உதவும். அப்படி உதவ நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

நான் பட்டம் பதவியை விரும்புபவனல்ல. அமெரிக்காவிலிருந்து டாக்டர் பட்டம் தருகிறேன் என்றார்கள். அண்ணாமலை பல்கலைக் கழகம் பட்டம் தருகிறேன் என்றார்கள். அதையெல்லாம் வேண்டாம் என்று சொல்லிவிட்டேன். டாக்டர் பட்டம் படித்துத் தான் பெறவேண்டும்.

தமிழகத்தின் எண்ணத்தைக் கூறவும், கர்நாடகத் தமிழர்களின் உரிமைக் குரல் எழுப்பவும், இங்குள்ள மற்ற மொழி பேசும் மக்களுக்காக உரிமைக்குரல் எழுப்பவும் பக்தவத்சலத்தை வெற்றி பெறச் செய்யுங்கள்.

மீண்டும் 10-ந் தேதி வெற்றி விழாக் கூட்டத்தில் இதே இடத்தில் பேசுகிறேன்

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்

### பாம்பை திருடிய ஆசாமியை போலீஸ் தேடுகிறது

பாரீஸ், ஜன. 3— பாரீஸில் ஒரு பூங்காப் பகுதியில் கார் ஒன்று நிறுத்தப் பட்டிருந்தது. அந்தக் காரில் மலைப் பாம்பு ஒன்றை ஒரு கூடையில் மறைத்துவிட்டு விட்டு வெளியே சென்றார் காரின் சொந்தக்காரர். அவர் திரும்பி வந்தபோது கூடையுடன் பாம்பை காணவில்லை.

இதுபற்றிய புகாரைத் தொடர்ந்து பாரீஸ் போலீசார் பாம்பையும், பாம்பைதிருடியவனையும் தேடிவருகிறார்கள்.

கார் சொந்தக்காரர் பாம்பை ஏன் கொண்டு வந்தார் என்று தெரியவில்லை.

### தெரு விளக்கு எரியவில்லையா? தொலைபேசியில் புகார்செய்யலாம்

சென்னை, ஜன. 3— நகரில் தெரு விளக்கு எரியவில்லையா? உடனே தொலைபேசி மூலம் புகார் செய்தால் மாநகராட்சி துரித நடவடிக்கைக்கும் எடுக்கும் என்று மாநகராட்சி கமிஷனர் கருப்பண்ணன் தெரிவித்தார்.

மாநகராட்சி வேலை நேரமான காலை 10-30 மணி முதல் மாலை 5 மணி வரை 39171 எக்ஸ்டென்ஷன் 278க்கு போன் செய்யலாம்.

மற்ற நேரங்களில் 39172க்கு போன் செய்தால் அதிகாரிகள் உடனடியாக நடவடிக்கை எடுப்பார்கள் என்று கருப்பண்ணன் தெரிவித்தார்.

### முகவரி மாற்றம்

ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி

சென்னை மாவட்ட கழக துணைச் செயலாளர்

39, லிங்கி செட்டித் தெரு

சென்னை—1.

போன்: 24833



## அமைச்சர் கே. ஏ. கே. நிகழ்ச்சிகள்

6-ந்தேதி:-பேராவூரணி தொகுதி நிகழ்ச்சிகள்.

7-ம் தேதி மாலை 7 மணி: கரூர் பால் குளிரூட்டும் நிலைய துவக்க விழா,

8-ம் தேதி காலை 10 மணிக்கு திருச்சி சிட்கோ தொழிற்பேட்டை நிகழ்ச்சிகள்.

மாலை 5-மணி-தஞ்சை நாஞ்சிக் கோட்டையில் பட்டு வளர்ப்புத் துறையின் விவசாயிகள் பயிற்சி நிலைய கட்டிட திறப்பு விழா.

மாலை 6-மணி-தஞ்சை பால்வளக் கருத்தரங்கு.

---

(4 ம் பக்கத் தொடர்ச்சி)

பரிசீலித்து வருகிறது.

அப்படியே வீடுகளுக்கு மின்சார சலுகை அளித்தாலும் அந்தச் சலுகை அதிகமாக இருக்காது.

ஒன்றுக்கு மேற்பட்ட குடும்பங்கள் வசிக்கும் வீடுகளில் கடந்த ஆண்டு அதிகமாக மின்சாரம் பயன்படுத்திய ஏதாவது ஒரு மாதத்தின் அளவுக்கு மின்சாரம் வழங்குவது பற்றி, விரைவில் ஆலோசித்து முடிவு எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

---

தூத்துக்குடி அனல் மின் நிலையம்:

# நிலக்கரிக்குப் பதில் எண்ணெய் உபயோகிக்க மத்திய அரசு அனுமதி

### தமிழக அரசின் கோரிக்கை ஏற்பு

திருச்சி ஜன. 3- தூத்துக்குடி அனல் மின்சார நிலையத்தில் நிலக்கரிக்குப் பதிலாக எண்ணையை உபயோகித்து மின்சாரம் உற்பத்தி செய்ய தமிழக அரசு விடுத்திருந்த கோரிக்கையை ஏற்று மத்திய அரசு அனுமதி அளித்துள்ளது.

தூத்துக்குடியில் அமைந்துள்ள அனல் மின்சார நிலையத்துக்கு தேவைப்படும் எரிபொருள் நிலக்கரி குறித்த நேரத்தில் வந்து சேராததால் மின் உற்பத்தி பெரும் அளவில் பாதிக்கப்பட்டிருப்பது தெரிந்ததே.

அண்மையில் டெல்லி சென்ற தமிழக மின்சாரத் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் இதுபற்றி மத்திய அரசு அதிகாரிகளிடம் ஆலோசனை நடத்தினார். நிலக்கரிக்குப் பதிலாக எரி எண்ணெயை உபயோகப் படுத்தலாம் என்றயோசனையை அவர் அப்போது மின்துறை சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மற்றும் வல்லுனர்களிடம் எடுத்துக் கூறினார்.

இந்த யோசனையை மத்திய அரசு ஏற்றுக் கொண்டுஎரிஎண்ணெயை உபயோகப்படுத்துவதற்கு அனுமதி அளித்துள்ளது. அமைச்சர் பண்ருட்டியின் மற்றொரு கோரிக்கையையும் மத்திய அரசு ஏற்றுக் கொண்டுள்ளது.

நிலக்கரிக்குப் பதில் அதிவேக கந்தக எண்ணெயையும் அனல் மின் நிலையத்தில் உபயோகப்படுத்தலாம் என்ற கோரிக்கைக்கு மத்திய அரசு அனுமதி அளித்துள்ளது.

எரிவாயு எண்ணெய் பம்பாய் ஆழ்கடல் எண்ணெய் கிணறுகளில் இருந்து அதிக அளவிலேயே கிடைத்து வருகிறது. ஆகவே நிலக்கரி தட்டுப்பாட்டை தவிர்க்க எரி எண்ணெய், மற்றும் கந்தக எண்ணெய் ஆகியவை உபயோகப்படுத்தப்படும்.

"பெல்" நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் எம். கே. ஸ்ரீதர் நேற்று அமைச்சர் பண்ருட்டியுடன் ஆலோசனைநடத்தினார், நிலக்கரிக்கு பதிலாக எரி எண்ணெய் மற்றும் கந்தக எண்ணெய் ஆகியவற்றை உபயோகப் படுத்துவதற்கு தகுந்தவாறு சாதனங்களை- யந்திரங்களின் அமைப்பை- சற்று மாற்றி அமைப்பது பற்றியும் அப்போது அமைச்சர் யோசனை கூறினார்.

### தீவிர நடவடிக்கைகள்

நிலக்கரி அல்லது எரி எண்ணெய் ஆகிய இரண்டு எரி பொருள்களை உபயோகிக்கும் வகையில் தூத்துக்குடி அனல் மின் நிலையம் அமைக்கப் பட்டுள்ளதாகவும் ஸ்ரீதர் தெரிவித்தார்.

மத்திய அரசின் அனுமதியை தொடர்ந்து பம்பாயில் இருந்து எரி எண்ணெயை விரைவில் தூத்துக்குடிக்குக்கொண்டு வர தமிழக மின்சார வாரியம் துரித நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறது. பெரிய பெரிய ராட்சச டாங்கர் வாகனங்கள் மூலம் இந்த எண்ணெய் கொண்டு வரப்படும்.

இந்த எரி எண்ணெய் தூத்துக்குடிக்கு வந்து சேருவதற்குள் அதை உபயோகப்படுத்துவதற்கு தகுந்தவாறு அனல் மின் நிலையம் தயார் நிலையில் இருக்கும் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

### புதிய சாதனை

மின்சாரத்துறை பொறியாளர்கள் மற்றும் 'பெல்' நிறுவன பொறியாளர்களின் கூட்டு முயற்சி தூத்துக்குடி அனல்மின்சார நிலையத்தில் ஒரு சாதனையையே ஏற்படுத்தியுள்ளது.

இரண்டு யூனிட்டுகள் முறையாக சாப்படுத்தப்பட்டு 380 மெகாவாட் மின்சாரம் தயாரிக்கப் படுகிறது.

இந்த இரண்டு யூனிட்டுகள் 420 மெகாவாட் மின்சாரம் தயாரிப்பதற்கான திறன் கொண்டது என்று ஸ்ரீதர் தெரிவித்திருக்கிறார்.

---

## முரசொலி பொய்ச் செய்திக்கு மறுப்பு

சென்னை, ஜன. 3— சென்னையை அடுத்த மாங்காட்டில் உள்ள உலகம் சுற்றும் வாலிபன் எம். ஜி. ஆர். ரசிகர் மன்றத்தின் செயலாளர் வைத்தி, தி. மு. க.வில் சேர்ந்து விட்டதாக முரசொலி வெளியிட்ட செய்திக்கு மாங்காடு கழகத்தின் சார்பில் மறுப்பு தெரிவிக்கப்பட்டுள்ளது.

மேற்படி மன்றத்தின் செயலாளர் வைத்தி என்பவர் அல்ல என்று கழகச் செயலாளர் செல்வமணி கூறியிருக்கிறார்.

இந்த மன்றத்தின் தலைவராக எம். எஸ். சேகர் இருந்து வருவதாகவும், ஆனால் மன்றத் தலைவர் செல்வத்தரசு என்பவர் தி.மு.க. வில் சேர்ந்து விட்டதாக முரசொலி வெளியிட்டுள்ள செய்தி அப்பட்டமான பொய் என்று செல்வமணி கூறியிருக்கிறார்.

---

## பம்பாயில் பாரதிவிழா

பம்பாய், ஜன. 3— பம்பாயில் சுன்னா பட்டியில் உள்ள பாரதி கலா மன்றத்தில் பாரதி விழா இரண்டு நாள் நடைபெற்றது.

மராட்டிய மாநில அமைச்சரும் பாரதி கலா மன்றத் தலைவருமான டாக்டர் சுப்பிரமணியம் கலந்துகொண்டு பேசினார்.

விழாவில் பத்தமடை ராமசேஷய்யர் மேல்நிலைப்பள்ளி தமிழ்ப் பேராசிரியர் ரங்காச்சாரி, தூத்துக்குடி காமராஜ் கல்லூரி பேராசிரியர் கணபதிராயன், சென்னை பாரதி காவலர் டாக்டர் ராமமூர்த்தி ஆகியோர் பேசினர்.

2-ம் நாள் நிகழ்ச்சியில் பட்டிமன்றம் நடைபெற்றது. பாரதியின் பேரன் மோகன்பாரதியும், பேத்தி அமிர்தா பாரதியும், பாரதியாரின் பாடல்களைப் பாடினார்கள், மாணவிகளின் நடன நிகழ்ச்சியும் நடந்தது.

விழாவை யொட்டி நடந்த போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளுக்கு அமைச்சர் சுப்பிரமணியம்பரிசுகளையும் பதக்கங்களையும் வழங்கினார்.

---

டாக்டர் நாவலர் எச்சரிக்கை:

# போராட்டத்தால் கழக அரசை மிரட்ட முடியாது

கோயமுத்தூர், ஜன. 3- போராட்டங்களை நடத்தி கழக அரசை யாராலும் மிரட்ட முடியாது என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

கோவையில் நடைபெற்ற கூட்டத்தில் நிதி அமைச்சர் நாவலர் கலந்து கொண்டு பேசினார். அப்போது அவர் கூறியதாவது:—

1967-க்குபிறகு தமிழக அரசு செயல்பாட்டையும் மற்ற மாநிலங்களான மகாராஷ்டிரா, உத்திரப் பிரதேசம் ஆந்திரம்ஆகிய மாநிலங்களின் செயல்பாட்டையும் ஒப்பிட்டு பாருங்கள். அந்த மாநிலங்களில் எந்த ஒரு முதலமைச்சரும் தனது பதவியில் முழுமையான காலம் நீடித்தது இல்லை.

மத்தியில் ஜனதா ஆட்சி இருந்தபோது மாநில அரசுகளை கலைப்பதற்கு முன்பு, சுப்ரீம் கோர்ட்டின் யோசனையை கேட்டறிந்த பிறகே நடவடிக்கை எடுத்தது. ஆனால் பிரதமர்இந்திரா காந்தியின் அரசு தமிழகத்தில் கழக அரசையும், பிற மாநிலங்களில் இந்திரா காங்கிரஸ் அல்லாதஅரசுகளையும் எந்த வித முன் அறிவிப்பும் இல்லாமல் கலைத்தது.

அதன் பிறகு நடந்த தேர்தலில் தி. மு. க.வையும் அதன் தோழமைக் கட்சிகளையும், பொது மக்கள் நிராகரித்துவிட்டு மீண்டும் கழகத்தை வெற்றி பெற செய்து புரட்சித்தலைவரை மீண்டும் ஆட்சியில் அமர்த்தினர்.

ஆந்திரத்து தெலுங்கு தேசக் கட்சித் தலைவர் என். டி. ராமாராவ் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அரசை பாராட்டுவதில் எந்த வியப்பும் இல்லை.

மேலும் தற்போது தி. மு. க. வினர் போராட்டங்கள் நடத்துவோம் என்று அறிவித்துள்ளனர். போராட்டங்கள் மூலம் கழக அரசை யாரும் மிரட்ட முடியாது.



இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசினார்,

### திருப்பூர் மணிமாறன்

இக்கூட்டத்தில் கழக கொறடா திருப்பூர் மணிமாறன் எம்.எல்.ஏ. பேசியபோது தமிழகம் வறட்சி, மின் வெட்டு, தண்ணீர் தட்டுப்பாட்டினால் தவித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் மத்திய அரசு தமிழகத்தின் மீது கருணை காட்டாமல் இருந்து வருகிறது என்று கூறினார்.

கூட்டத்திற்கு சண்முக சுந்தரம் தலைமை வகித்தார்.

---

குடிநீர் சப்ளைக்கு

## கரூர் நகராட்சிக்கு ஜெனரேட்டர்

கரூர், ஜன. 3— மின்வெட்டு காரணமாக குடிநீர் சப்ளையில் பாதிப்பு ஏற்படாமல் இருக்க கரூர் நகராட்சிக்கு ஜெனரேட்டர் வாங்கி அளிப்பது என குழாய்க்கிணறு வாரியத் தலைவர் கரூர் சின்னச்சாமி எம். எல். ஏ. தலைமையில் சர்வகட்சிக் குழு கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

இக்குழுவில், சர்வ கட்சி பிரமுகர்கள், வியாபாரிகள் பிரமுகர்கள் உறுப்பினர்களாக உள்ளனர்.

---

காலத்தை வென்ற

## எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள் தேர்வு

சென்னை, ஜன. 3— ராயபுரம் 10வது வட்டத்தில் உள்ள காலத்தை வென்ற எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள் தேர்தல் வட்டச் செயலாளர் தாமோதரன் தலைமையில் நடைபெற்றது. பகுதி செயலாளர் இரா. சோமசுந்தரம் கட்பீஸ் வரதன் ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

எஸ். கோவிந்தராஜ் தலைவராகவும் ஆர். அருணாசலம் செயலாளராகவும் பரமசிவம் துணைச் செயலாளராகவும் ராஜ் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

---

புரட்சித்தலைவர் ஆட்சியில்

# முஸ்லிம்களுக்கு அளிக்கப்படும் பல்வேறு சலுகைகள்

### அமைச்சர் ராஜாமுகமது பேச்சு

கோவில்பட்டி ஜன. 3- முதல்வர் புரட்சித் தலைவர் ஆட்சியில் முஸ்லிம் பெருமக்களுக்கு பல்வேறு சலுகைகள் அளிக்கப்பட்டு வருவதாக அமைச்சர் ராஜாமுகமது குறிப்பிட்டார்.

எட்டையபுரத்தில் உமறுப்புலவரின் நினைவு நாள் விழா கொண்டாடப்பட்டது விழாவுக்கு காயல்பட்டினம் ஹாபீஸ் செய்யது அகமது தலைமை வகித்தார்.

மேலப் பாளையம் கே.எம். செய்யது அப்துல் காதர் முன்னிலை வகித்தார். காஜா முகைதீன் அனைவரையும் வரவேற்றார்.

விழாவில் கலந்து கொண்டு நீர்ப்பாசனத் துறை அமைச்சர் ராஜாமுகமது பேசுகையில் கூறியதாவது:-



தமிழ்நாட்டில் உள்ள முஸ்லிம் பெருமக்களுக்கு புரட்சித்தலைவர் அரசு செய்த காரியங்கள் ஏராளம். உமறுப்புலவர் பற்றி ஆராய மதுரைகாமராசர் பல்கலைக் கழகத்தில் தனிப்பிரிவு ஒன்று நிறுவப் பட்டுள்ளது.

இந்த ஆராய்ச்சிக்காக அரசு முதலில் ரூ 2லட்சம் மட்டும் ஒதுக்கியது.

இந்த தொகை போதாது என்று அரசுக்கு தெரிவிக்கப் பட்டதால் ரூ.7 லட்சம் ஒதுக்கமுடிவு செய்தோம்.

தற்பொழுது பணவீக்கம் காரணமாக அந்த ரூ. 7 லட்சத்தை 9 லட்சமாக அனுமதிக்க புரட்சித தலைவர் முடிவு எடுத்து அறிவிக்க இருக்கிறார்.

முஸ்லிம் தொழுகை செய்துவரும் உதுமான்களுக்கு மாதம் ரூ. 250 வழங்க உத்தரவிட்டிருப்பதும் புரட்சித்தலைவர் அரசு தான்.

இதற்காக ரூ. 1 கோடி வரை நிதி ஒதுக்கீடு செய்யப் பட்டுள்ளது. இந்த உதவித் தொகை ஏழ்மை நிலையில் உள்ள சுமார் 20 ஆண்டுகள் மசூதிகளில் பணி புரிந்தவர்களுக்கு வழங்கப்பட உள்ளது.

இதற்கான சான்றிதழ்களுடன் அந்தந்த பகுதி தாசில்தார்களிடம் மனுச் செய்தால் போதும்.

இந்தஉத்தரவு பிறப்பிக்கப்பட்டபின் இப்போது சுமார் 458 மனுக்கள மட்டுமே தமிழகம் முழுவதும் வந்துள்ளது.

### உதவித்தொகை: முதல்வர் வழங்குகிறார்

சுமார் ஆயிரம் பேர்களுக்காவது இந்த தொகையை வழங்க முடிவு செய்துள்ளோம். இந்த உதவித் தொகை வழங்கும் விழாவும், உமறுப்புலவர்நினைவாலயம் அடிக்கல் நாட்டு விழாவும் ஜனவரி 10 அல்லது 15ஆம் நாளுக்குள் இதே எட்டையபுரத்தில் நடக்க இருக்கிறது. அதில் முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்டு உதவித் தொகையை வழங்க இருக்கிறார் என்ற நல்ல செய்தியை இந்த நேரத்தில் நான் கூறிக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

விழாவில் பேராசிரியர் கு. துரைராஜ், பேராசிரியர் அப்துல்கபூர் எஸ். அழகர்சாமி எம். எல். ஏ., மதுரை முன்னாள் எம். எல். ஏ. லட்சுமிநாராயணன் ஆகியோர் பேசினார்கள்,

---

அமைச்சர் பண்ருட்டி தகவல்:

# பல குடும்பம் வாழும் வீடுகளுக்கு மின் வெட்டிலிருந்துசலுகை

சென்னை, ஜன. 3- ஒரே வீட்டில் பல குடும்பங்கள் வசித்தால் அந்த வீடுகளுக்கு மின்சார வெட்டிலிருந்து சலுகை அளிப்பது பற்றி அரசு ஆலோசித்து வருவதாக அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தெரிவித்தார்.

தமிழகம் முழுவதும் மின்சார வெட்டு அமுலில் உள்ளது. வீடுகளுக்கு மின்சார வெட்டு அறிவிக்கப்பட்டுள்ளது. அதன்படி ஒரு வீட்டில் ஒரு மாதத்திற்கு அதிகபட்சம் 250 யூனிட் மின்சாரம்தான் உபயோகிக்க வேண்டும் என்ற கட்டுப்பாடு விதிக்கப்பட்டுள்ளது.

ஒரே வீட்டில் பல குடும்பங்கள் வசித்தாலும் அவர்கள் எல்லோருக்கும் சேர்த்து 250 யூனிட் மின்சாரம் தான் இப்போது வழங்கப்படுகிறது.

அப்படிப்பட்ட வீடுகளுக்கு இந்த மின்சார அளவு போதாது என்றும் மின்சாரம் வழங்குவதை அதிகப்படுத்த வேண்டும என்றும்கேட்டு, தமிழ்நாடு மின்சார வாரியத்துக்கு ஏராளமான கோரிக்கைகள் வந்தன.

இதுபற்றி தமிழக மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:—

வீடுகளுக்கு கொடுக்கப்படும் மின்சார அளவை உயர்த்தவேண்டும் என்று ஏராளமான கோரிக்கைகள் வந்துள்ளன. கொடுக்கப்படும் மின்சாரம் பல குடும்பங்கள் வசிக்கும் வீட்டுக்கு போதவில்லை என்ற புகார் வந்துள்ளது.

### விரைவில் அறிவிப்பு

எனவே வீடுகளுக்கு விதிக்கப்பட்டுள்ள 250 யூனிட் மின்சார உச்ச வரம்பை தளர்த்தி அதை சற்று அதிகப்படுத்துவது பற்றி மின்சார வாரியம்

(1-ம் பக்கம் பார்க்க)

---



## சதீஷ் தவானுக்கு 'ஆர்யபட்டா' விருது

திருப்பதி. ஜன. 3— விண்வெளி கமிஷன் தலைவர் பேராசிரியர் சதீஷ் தவானுக்கு 1983 ஆம்ஆண்டுக்கான 'ஆர்யபட்டா' விருது அளிக்கப் படுகிறது.

திருப்பதியில் நடைபெறும் இந்திய விஞ்ஞான காங்கிரசின் 70-வது தொடரின் ஆரம்ப விழாவில் பிரதமர் இந்திரா காந்தி இந்த விருதை சதீஷ் தவானுக்கு வழங்குகிறார்.

நாட்டில் உள்ள தலைசிறந்தவிமான இன்ஜினியர்களில் சதீஷ் தவானும் ஒருவர். இந்தப்பதக்கம் 3 ஆண்டுகளுக்குஒருதடவை வழங்கப்படுகிறது,

---

## 50 சி. ஐ. டி. யு. தொழிலாளர்கள் கழகத்தில் இணைந்தனர்

கோவை, ஜன. 3— கோவை வெள்ளலூர் கே. என். ஆர். டெக்ஸ்டைல் மில்லில் பணியாற்றும் சி. ஐ. டி. யு. ஐக்கிய சங்கத்தைச் சேர்ந்த 50 தொழிலாளர்கள், அச்சங்கத்திலிருந்து விலகி வே. க. தனகோபாலன் (மாவட்ட பஞ்சாலை அண்ணா தொழிலாளர் சங்க பொருளாளர்) எஸ். அரங்கசாமி (மாவட்ட சங்க துணைப் பொதுச் செயலாளர்) முன்னிலையில் பஞ்சாலை அண்ணா தொழிலாளர் சங்கத்தில் இணைந்தார்கள்.

---

## மருத்துவ-மனையில் கழகத்தினர்

சென்னை, ஜன. 3— 72-வதுவட்டம் அண்ணா நற்பணி மன்ற உறுப்பினர் யுவராஜ் உடல் நலக்குறைவு காரணமாக ஸ்டான்லிமருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்.

மன்ற செயலாளர் வில்சனின் தந்தை துரைக்கண்ணுஉடல்நலக்குறைவு காரணமாக இ. எஸ். ஐ. மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்.

மேற்கண்ட இருவரையும் வட்ட செயலாளர் எஸ். பி. சண்முகம் மற்றும் ஆர். பழனிச்சாமி எல். முனுசாமி ஆகியோர் சந்தித்து உடல் நலம் விசாரித்தனர்,

---

12-ந்தேதிக்கு பிறகு

# தொழிற்சாலைக்கு 100 சதவிகித மின் வெட்டு நீங்கிவிடும்

### மின்வாரிய தலைவர் தகவல்

சென்னை, ஜன.3- பெரிய தொழிற்சாலைகளுக்கு விதிக்கப்பட்டு இருக்கும் 100 சதவிகித மின்வெட்டு இம்மாதம் 12-ந் தேதிக்குமேல் நீங்கிவிடும் என்று மின்வாரியத் தலைவர் விஜயராகவன் அறிவித்துள்ளார்.

மின்வெட்டு நீங்குமா அல்லது தொடர்ந்து நீடிக்குமா என தமிழ்நாடு மின்வாரிய தலைவர் பி. விஜயராகவனிடம் கேட்டதற்கு அவர் கூறியதாவது:—

பெரிய தொழிற்சாலைகளுக்கு 100 சதவிகித மின்வெட்டு அறிவிக்கப்பட்டபோது அனல் மின்சார நிலையங்களில் இருந்து 590 மெகாவாட் மின்சாரம்தான் கிடைத்தது.

பழுதாகி இருந்த அனல் மின் நிலைய யந்திரங்கள் சரி செய்யப்பட்டுள்ளதால், அங்கு மின்சார உற்பத்தி அதிகரித்து இப்போது 1060 மெகாவாட் மின்சாரம் கிடைக்கிறது.

இதனால் தொழிற்சாலைகளுக்கு விதிக்கப்பட்டு இருக்கும் 100 சதவிகித மின்சார வெட்டு 12-ந் தேதிக்குமேல் நீடிப்பதற்கு வாய்ப்பு இல்லை.

மின்சார வெட்டு அறிவிக்கப்பட்டபோது தூத்துக்குடி அனல் மின்சார நிலையத்தில் 100 மெகாவாட் மின்சாரமே உற்பத்தியானது. இப்போது 2 பிரிவுகளில் 180 மெகாவாட் வீதம் 360 மொகாவாட் கிடைக்கிறது. 3-வது பிரிவை சரிபார்க்கும் வேலை துரிதமாக நடந்து வருகிறது.

### மின்வாரிய சாதனை

இன்னும் ஒரு வாரத்தில் அங்கிருந்து மேலும் 70 மெகாவாட் மின்சாரம் கிடைக்கும்.

எண்ணூர் அனல் மின்சார கூடத்தின் உற்பத்தி 140 மெகாவாட்டில் இருந்து 250 ஆகவும் நெய்வேலியில் 350மெகாவாட்டிலிருந்து 450 ஆகவும் உயர்ந்திருக்கிறது.

இவ்வாறு மின்வாரிய தலைவர் விஜயராகவன் கூறினார்.

---

## புதுவையில் உள்ளாட்சித் தேர்தல்: கழகம் கோரிக்கை

புதுவை, ஜன. 3— புதுவையில் உள்ளாட்சித் தேர்தல்களை விரைவில் நடத்த வேண்டும் என்று புதுவை மாநில கழக செயலாளர் பி. கே. லோகநாதன் கவர்னர் சாண்டியிடம் தெரிவித்தார்.

புதுவை கவர்னருடன் புதுவை மாநில கழக செயலாளர் பி. கே. லோகநாதன் சந்தித்துப் பேசியபோது இதை தெரிவித்தார். மேலும் தமிழகத்தில் உள்ளாட்சி தேர்தல் நடக்கும்போது புதுவையிலும் நடக்கும்என்று புதுவை முதல்வர் தெரிவித்திருப்பதை தான் ஏற்கவில்லை என்றும் லோகநாதன் கூறினார்.

புதுவை உள்ளாட்சித் தேர்தல் நடத்துவதுபற்றி அரசுதான் முடிவு செய்ய வேண்டும் என்று கவர்னர் தெரிவித்ததாகவும் அவர் நிருபர்களிடம் தெரிவித்தார்.

புதுவை தி.மு.க. முதல்வர் மீது விசாரணை கோரி

# உண்ணாவிரதமிருக்கும் ராதாபாய் உடல்நிலை மிகவும் கவலைக்கிடம்

பாண்டிச்சேரி. ஜன. 3- புதுவை முதல்வர் ராமச்சந்திரன் மீது விசாரணை நடத்த வேண்டும் என்று கோரி உண்ணா விரதம் இருந்து வரும் ராதாபாய் உடல்நிலை கவலைக் கிடமாக உள்ளது.

புதுவை முதல்வர்ராமச் சந்திரன் மீது பெண் அதிகாரி ராதாபாய் தான் கொடுத்த புகார் குறித்து புதுவை தற்காலிக கவர்னராக இருந்த பட்வாரி முன்பு அறிவித்த விசாரணையை உடனடியாக அமுல் படுத்த வேண்டும் என்று ராதாபாய் தொடர்ந்து உண்ணாவிரதம் இருந்து வருகிறார்.

புதுவை பாரதி பூங்கா வில் அவர் தொடர்ந்து 26 நாட்களாக உண்ணா விரதம் இருந்து வரு கிறார்.

தற்போது அவர் உடல் நிலை மிகவும் மோசமாகி கவலைக்கிடமாக உள் ளது.

அவர் உடல் முழுவதும் வீங்கிய நிலையில் ஒரு மரத்தடியில் சாய்ந்த வாறு உள்ளார்.

தொடர்ந்து 26 நாட் களாக உண்ணாவிரதம் இருந்தும் தான் இறக்கா மல் இருப்பதற்கு தனது ஆன்மீக யோகா சன பலன்கள்தான் கார ணம் என்று தெரிவித் தார்.

தான் உயிர் பிழைக்க ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டாலும்தனது பிரச்சினை தீரும்வரை அங்கும் தொடர்ந்து சாகும் வரை உண்ணா விரதம் இருப்பேன் என் றும் அவர் அறிவித்துள் ளார்.

## கவர்னரிடம் முறையீடு

ராதாபாய் பிரச சினையை தீர்க்க கோரி வலது கம்யூனிஸ்டு தலைவர். கழக செய லாளர் லோகநாதன். புதுவைமாநில சட்டசபை எதிர்க்கட்சி தலைவர் உத்திரவேலு, ஆகியோர் பிரதமர் இந்திரா காந்திக்கு தந்தி கொடுத் துள்ளனர்.

மேலும் இவர்கள் ராதாபாய் நிலைமை குறித்து கவர்னரிடம் முறையீடு செய்துள்ள னர்.




Published by K.Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.

Editor:
B. PARASURAMAN.


அமைச்சர் ராஜேந்திரன் பேச்சு:

# இழந்த பெருமைகளை தமிழகம் மீண்டும் பெறவேண்டும்

திருச்சி, ஜன. 3- ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழகம் பெருமை பல கொண்டு விளங்கி இருந்தது. அந்தப் பெருமையை மீண் டும் பெறுவோம் என்று அமைச்சர் எஸ்.என். ராஜேந்திரன் கூறினார்.

கங்கைகொண்ட சோழ புரத்தில் ராஜேந்திர சோழன் பிறந்த நாள் விழாவில் அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் பேசியதாவது:-

இதுபோன்ற விழாக் களை நாம் நடத்துவது நமது மாமன்னர்களின் வாழ்க்கையையும் ஆட்சி முறையையும் மக்கள் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத் தான்.

## கட்டிடகலையில் சிறந்த தமிழர்கள்

கட்டிடக்கலையில் எந்த அளவுக்கு தமிழர்கள் சிறந்து விளங்கினார்கள் என்பதையும் தமிழர் நுண்ணறிவையும் கலை நுட்பதையும் அறிந்து கொள்ள வேண்டும்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கலையை வளர்த் தவர்கள் தமிழர்கள்.

எந்தவசதியும் இல்லாத அந்த காலத்தில் கல்லணை போன்ற அணை களையும் எவ்வளவு துல்லியமாக கணக்கிட்டுக் கட்டி இருக்கிறார்கள் என்பதை பார்க்கும் போது உலகமே தமிழர் களின் வீரத்தையும்கலைத் திறனையும் அறிவுத் திறனையும் கண்டு வியக் கிறது.

ஆங்கிலேயர்கள் இங்கு வரும் முன்பே கட்டிடக் கலையில எவ்வளவு சிறந்து விளங்கினார்கள் தமிழர்கள் என்பதை வரலாறு நமக்கு காட்டு கிறது.

கடலில் கட்டுமரம் இருந்த அந்த காலத்தி லேயே கப்பல்கள் கட்டி ஏற்றுமதி இறக்குமதி வாணிபத்தை நடத்தி இருக்கிறார்கள்.

பெருங்கப்பல் படையை வைத்து பல நாடுகளை வென்று இருக்கிறார்கள் என்பதை உணரும்போது



தமிழகம் இழந்த அந்தப் பெருமையை மீண்டும் அடையவேண்டும். தமிழ் மன்னர்கள் மக்களின் தேவைகளை உணர்ந்து செயல்பட்டார்கள்.

## ரூ. 1 லட்சம் செலவில்...

இங்குள்ள பொன்னேரி என்று அழைக்கப்படும் சோழகங்கை என்ற ஏரிக்கு அன்று கொள்ளி டத்திலிருந்து 60 மைல் தூரம் வாய்க்கால் வெட்டி தண்ணீர் கொண்டு வந்து இருக் கிறார் ராஜேந்திர சோழர்.

ஆனால் இன்றைக்கு அந்த மாதிரி செய்வது கடினம். ஏனென்றால் நகரங்களும் ஊர் களும் ஏற்பட்டு விட்ட தால் அது செயல்படுத்த முடியாது. இந்த ஏரியை தூர் எடுத்து ஆழப்படுத்து வதற்காக ரூ. 1 லட்சம் செலவில் உடனடியாக வேலைகள் தொடங்கப் படும்.

இதன்மூலம் பல ஆயி ரக்கணக்கான ஏக்கர் நிலம் பாசன வசதி பெறும்.

இவ்வாறு அமைச்சர் ராஜேந்திரன் பேசினார்.

இன்று மாலை

## 21-வது வட்டத்தில் கழக பொதுக்கூட்டம்

சென்னை, ஜன. 3— டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி 21-வது வட்டம் கே. என். எஸ். டிப்போவில் இன்று (3-ந்தேதி) மாலை ஏ. மகாசாமி தலைமை யிலும். ஆர். சுப்புராயலு முன்னிலையிலும் கழகப் பொதுக்கூட்டம் நடைபெறுகிறது.

திருவை அண்ணா மலை, ஐசரிவேலன், ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, வண்ணை கோவிந்தன், என். வி. என். செல்வம், நாஞ்சில் மணிமாறன், பாலன், ஜே. பி. பாபு சந்தானம், என்.சங்கரன், என். கண்ணாயிரம் ஜி. லோகநாதன் 18-வது வட்ட அவைத்தலைவர் அலை ஓசை சண்முகம் ஆகியோர் பேசுகின்றனர்.

## குமரிமாவட்ட கழக ஆலோசனை கூட்டம்

நாகர்கோவில், ஜன.3- குமரி மாவட்ட கழக நிர்வாகிகள் ஒன்றிய நகர-நகரியச் செயலாளர் கள், மாநில பொதுக்குழு உறுப்பினர்கள், மாவட்ட பிரதிநிதிகள்— சிறப்பு அழைப்பாளர்கள் அடங்கிய மாவட்டக்குழு கூட்டம் நாகர்கோவில் பயோனியர் குமாரசாமி பயணியர் விடுதியில் மாவட்டச் செயலாளர் எப்.எம். இராசரத்தினம் முன்னிலையில், மாவட்ட அவைத் தலைவர் டாக்டர் எஸ். நாக ராஜன் தலைமையில் நடைபெற்றது.

ஒன்றியச் செயலாளர் களான ஆ. கோலப்பன் எம். எஸ். ஆப்தீன், எம். பீட்டர், ஏ. யாடசாமி எஸ். தங்கமணி, சிவ. குற்றாலம், நகரச் செய லாளர்களான என். சி. இராமசாமி, வை. சுப் பிரமணியம், எஸ்.பிரான் சிஸ் மற்றும் பி. கோபி நாத், எம்.ஜே. பெஷி, கவிஞர் டி. சதாசிவம், இ. ஞானதாஸ் உட்பட பலர் தங்கள் கருத்துக் களை விளக்கிப் பேசினர்.

கூட்ட தொடக்கத்தில், மறைந்த வினோபாஜி, நடிகர் டி. கே. பகவதி, சட்டமன்ற உறுப்பினர் கேசவ ஆதித்தன், குமரி முனை மஜாசப், ஆகி யோர மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கப் பட்டது.

முதல்வர் புரட்சித் தலைவரின் அனுமதி யோடும் கழகப் பொதுச் செயலாளா பூ.உ.சவின் ஒப்புதலோடும் குமரிமாவட் டத்தில் வருகிற ஏப்ரல் மாதத்தில், மாவட்ட கழக மாநாடு நடத்து வது எனவும் தீர்மானிக் கப்பட்டது.

மாநாட்டின் போது, மாநாட்டு மேடையில் புரட்சித் தலைவரிடம் கழக வளர்ச்சிநிதி வழங்கு வது எனவும் தீர்மானிக கபபட்டன.

மற்றும் பல தீர்மானங் கள் நிறைவேற்றப் பட்டது.

இவ்வாறு ராஜ ரத்தினம் தெரிவித்துள் ளார்.

## தூயமணி தாயார் மரணம்

சென்னை, ஜன. 3— பல்லவன் போக்குவரத் துக் கழக அண்ணா தொழிலாளர் சங்க முன்னாள் தலைவர் கே.பி.தூயமணியின் தாயார் மாதவி அம்மையார் மரணமடைந் தார்.

கடந்த சில நாட்களாக மாதவி அம்மையார் உடல் நலம் குன்றி சிகிச்சை பெற்றுவந்தார்.

தகவல் கிடைத்ததும் பல்லவன், போக்கு வரத்துக் கழக அண்ணா தொழிலாளர் சங்க நிர் வாகிகள் மற்றும் கழகத் தோழர்கள் சென்று இறுதி அஞ்சலி செலுத்தி னர்.

தாயாரை இழந்து வாடும் தூயமணிக்கும் மற்றும் குடும்பத்தினருக் கும் ஆறுதல் கூறினர்.

ரிசர்வ் வங்கியின் அதிகப்பற்று இல்லாமல்

# தமிழக அரசின் நிதி நிலவரம் சிறப்பாக உள்ளது

நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேச்சு

தஞ்சாவூர். ஜன. 3- ரிசர்வ் வங்கியின் அதிகப்பற்று இன்றியே தமிழக அரசின் நிதி நிலைமை சிறப்பாக உள்ளதாக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

தஞ்சையில் வட்ட வருவாய் அலுவலகத்திற் கான அடிக்கல் நாட்டு விழா நடந்தது.

அடிக்கல்லை நாட்டிப் பேசுகையில்நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறிய தாவது:—

தமிழக அரசின் நிதி நிலவரம் சிறப்பாக உள்ளது. ரிசர்வ் வங்கி யின் அதிகப்பற்று இன்றியே தமிழக அரசின் நிதி நிலைமை சிறப்பாக உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

குழந்தைகள் சத்துண வுத் திட்டத்திற்காக. சுமார் 112 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டுள் ளது.

இவ்வளவு பெரிய தொகை ஒரு திட்டத்திற் காக ஒதுக்கீடு செய்யப் பட்ட பிறகும் தமிழக அரசின் நிதி நிலைமை திருப்திகரமாக இருந்து வருகிறது.

## குறித்தபடி நிறைவேற்றம்

6-வது ஐந்தாண்டுத் திட்டத்தில் குறிப்பிடப் பட்டுள்ள திட்டங்கள் அனைத்தையும் தமிழக அரசு நிறைவேற்றும்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறி னார்.

பல்வேறு திட்டங்கள் அடிப்படையில் 2 ஆயிரத்து 968 பேர் களுக்கு 13 லட்ச ரூபாய் உதவித் தொகையாக இந்நிகழ்ச்சியில் வழங்கப் பட்டது.

19 வது வட்ட

## எம்.ஜி.ஆர். பொதுப்பணி மன்ற நிர்வாகிகள்

சென்னை, ஜன. 3— 19-வதுவட்ட எம்.ஜி.ஆர் பொதுப்பணி மன்ற நிர் வாகிகள் தேர்தல் நடை பெற்றது.

கே. பழனி தலைவராக வும் ஜெயப்பிரகாஷ்செய லாளராகவும், பிரேமாமி நாதன் துணைச் செய லாளராகவும், கண்ண தாசன் பொருளாளராக வும், கணேசன், ராமச் சந்திரன், ராகவன் காப் பாளர்களாகவும், தேர்ந் தெடுக்கப்பட்டனர். செயற்குழு உறுப்பினர் களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.